க. வீரகத்தியின்

# சிவதீ புராணம்

இலங்கை
28-3-1985

# சிவதி புராணம்

என்னும்

# சக்தி புராணம்



க. வீரகத்தி



கிடைக்குமிடம் :

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
79, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை-108.

1985

சிவ சிவ

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி**
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**
**அவர்கள்**
அதிபர் ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள்

## ஆசியுரை

பண்டிதர் திரு. க. வீரகத்தி அவர்கள் இயற்றியுள்ள ''சிவதி புராணம்'' சிறந்த பக்தி உணர்வுடன் அமைந்துள்ளது.

அன்னையின அருள்நலம் வேட்கும் ஓர் ஆன்மாவின் குரல் என்று இச் சிறு நூலை வர்ணிக்கலாம்.

சக்தியைச் சிவை என்று சொல்வதுண்டு; ''சிவா'' என்ற நீட்டலொலியே சக்தியை அழைப்பதாகும் என்று பண்டிதர்கள் பகர்வர். இக் கவிஞர் ''சிவதி'' எனறு அன்னையை அழைக்கிறார். அதையும் நாம் மகிழ்ந்து வரவேற்போம்.

பழைய மரபுகளும், புதுமைச் சொற்களும் சங்கமிக்கும் இப் பக்தி நூல் நன்கு அமைந்துள்ளது.

பண்டிதர் திரு. வீரகத்தி அவர்கள் இத்தகு இறைநலப் பணிகள் பல மேலும் மேலும் செய்ய வேண்டுமெனவும், இவருக்கு எல்லா நலங்களும் வளங்களும் சித்திக்க வேண்டு மெனவும் செந்திநகர் மேய கந்தன் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம்.

சிவ சிவ

உ

முருகா

திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்,
சென்னை

## முன்னுரை

உருகிய தங்கத்தில் பொருததின மணி ஒன்றிவிடும். அதுபோல் உருகிய உள்ளத்தில் இறைவன் ஒன்றிவிடுவான்.

"நெஞ்சக்கன கல்லு நெகிழ்ந்துருக"

என்றும்,

"உருகும் அடியவர் இருவினை
இருள் பொருள் உதய தினகர"

என்றும் அருணகிரிநாதர் உபதேசிக்கின்றார். ஆதலால் நமது உள்ளத்தை உருக வைத்து நாம் இறைவனுடன் ஒன்றுதல் வேண்டும்.

நல்ல பக்திப் பாடலால் நமது உள்ளம் உருகும்.

எனது அன்பரும், செந்தமிழ்ப் புலமையும் உடைய பண்டிதர் க. வீரகத்தி அவர்கள் சிறந்த சக்தி உபாசகர். இவருடைய பக்தி வெள்ளத்தில் மிதந்துவந்த நூல் சிவதி புராணம்.

இந்தத் துதி நூல் ஒவ்வொரு சொல்லும் உயிரோட்டமுள்ளதாகத் திகழ்கின்றது. படிப்பவருக்கு பக்திப் பரவசம்

உண்டாகிறது. நமது நாடி நரம்புகளை மீட்டி விடுகின்றது. திரட்டுப் பால் போல் அளவில் சிறியதாய், மகிமையில் பெரிய தாய் விளங்குகின்றது. இதன் ஆசிரியர் பக்தியாகிய தங்கக் கம்பியில் தத்தும் முத்துக்களைக் கோதது அம்பிகைக்குச் சூட்டி யிருக்கிருர். அன்பர்கள் இதனை ஓதிப் பயன் பெறுவார்கள்.

''சிவதி புராணமெனும் செந்தமிழ் நூலை
பவதி பகவதிக்குப் பாங்காய் —யுவதியருள்
மேவுபுகழ் பண்டித வீரகத்தி தந்தனுல்
மூவுலகும் ஏத்தும் முதிர்ந்து.''

Dr. V. A. DEVASENAPATHI
Director
Tamil University
School of Philosophy,
Kancheepuram

## AN APPRECIATION

*Puranam* is understood as a happy blend of the old and the new. It is not a fabrication of the brain any more than it is a faithful record of actual historical events. It may have a nucleus of history elaborated beyond the reach of factual, point to point verification, by poetic and artistic embroidery. When we read our Puranas, we feel that some truths are conveyed in and through the ornamental details supplied by the poet's imagination.

In Pandithar Veeragathy's *Sivati Puranam*, short in compass but comprehensive in its sweep, we have an inspiring testimony of his dedication to the worship of God's Grace, Personified as *Sivati*, a novel name for the ancient originals, *Siva* or Sivai. The poet intends it to be a combination of *Siva* and *Sakti*. *Sivati* is his coinage.

*Sivati Puranam* is a record of Panditthar Veeragathy's personal, mystic experiences. To him *Sivati*

is a living Reality-not a philosophical abstraction. As he contemplates Her. he finds the multitude of conflicting selves within himselves, fused to a harmony, rising above all tumult. In one mood, he sees Her in the blaze of the setting sun, in the streak of light that is the crescent in a sky darkened by nightfall, in the twinkling of stars, in the honey-laden flowers, in the joy abounding songs. He sees Her wherever there is beauty. Even as his soul throbs with delight, he is pulled up by the misery he sees around—in the tears of helpless poor folk, wearily walking along and sighing heavily. His soul cries out in agony, "The holy ones declare that You are the Divine Energy that creates all the worlds and shines through them. Would the Fountain of Your Divine Grace dry up if You lavish it on all those crushed by the weight of their poverty-stricken lives?" His faith overcomes this despair. He beholds the Divine Mother in Her beauty, love, compassion and wisdom, ready to grant the wishes of Her devotees. Surely, his own wish is that Her Grace should enable everyone in this world to live as one ought to live The poem ends on a joyful note that the hearts of devotees will be filled with the peace and bliss that passeth all understanding.

May Pandithar Veeragathy's offering to the Divine Mother evoke Her Grace to bless the world with peace and prosperity material and spiritual !

## அணிந்துரை

இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி. லிப்.
*[நூலகர், மறைமலையடிகள் நூலகம், சென்னை-1.
ஆட்சியர், சை. சி. நூற்பதிப்புக் கழகம், சென்னை-108.]*

தாய்த் தெய்வ வழிபாடு மிகமிகப் பழமையானதாகும். அன்னை காட்டததான் அத்தனை யாம் அறிகிறோம். அன்னை யில்லையேல் அத்தன் இல்லை. இவற்றின் பொருள் உணர்ந்து தான அம்மையபபன என ஒருருவில் இரு தெய்வங்களையும் வழிபட்டு வருகிறோம். உடலின இடப் பாகத்தில் இருப்பது இதயம். அஃது இயஙகவில்லையேல் உடலியக்கமே இல்லை. அதனுல்தான சிவன சக்தியை இடப் பாகத்தில் கொண்டான் போலும்.

சக்தியின் பெருமையைப் பாடவந்த திரு. வீரகத்தி அவர்கள் சிவனுக்கு இணையான சத்தியாதலின் ஒரு புதுப் பெயரையே படைத்துவிட்டார். சிவன் : ஆண்பால். சிவதி : பெண்பால். சிவை என்று முன்னோர் பெயரிட்டிருக்க சிவதி என்று புதுப் பெயரைச் சக்திக்குப் படைத்திருக்கிறார் கவிஞர்.

சிவனுக்கு மணிவாசகரின் சிவபுராணம் உள்ளது. எனவே பண்டிதர் சிவதிக்குச் சிவதி புராணம் பாடியுள்ளார்.

சிவபுராணம் எவ்வாறு சிவனின பெருமைகளையும் பேராற் றல்களையும் எடுததுக்கூறி அவனை வழிபடுகிறதோ அவ்வாறே சிவதியின் பெருமைகளையும் பேராற்றல்களையும் எடுத்துக் கூறு கிறது இப் புராணம்.

அன்னை அழகின் திருவுரு, ஆயிரம் பெயருடையாள். இங்கங்கெனாதபடி எங்கும் எதிலும் நிறைந்திருப்பாள். இயற்கையே அவள். அவளே இயற்கை. எனவே அன்னை அழகை அவளுடைய ஆயிரம் திருநாமங்களில் பலவற்றைக் கூறி அவளை வழிபடும் இப் புராணம் சக்தி வழிபாடு செய்வோர்க்கு அரிய நூல். பாடித் துதிப்பதற்கும் படித்து உருகுதற்கும் ஏற்ற நூல். வாழ்க கவிஞரின் பணி.

இந்த இருபதாம் நூற்றாண்டில் வெளிவந்த சமய இலக்கியப் புதிய படைப்புகளில் இது மிகச் சிறந்ததெனா அறிஞர்கள் போற்றுவது திண்ணம்.

# என்னுரை

*தாவாரம் இல்லை தனக்கொரு வீடில்லை*
*ஆராய்வு ஏதுக்கடி சிவதீ— தமிழ்*
*ஆராய்வு ஏதுக்கடி சிவதீ !*

ஆம், இதயத்திலே அவதியும், அவலிப்பும். மதியிலே மந்திப்பும், மறதியும். உணர்விலே ஒருவித சூனியம் ! இந்த அக நோக்காடுகளிலிருந்து சற்று நான் விடுபட விழைந்தனர் போலும், அன்பே உருவான அறிஞர் திரு. முத்துக்குமார சுவாமி, எம். ஏ , எம். லிப். அவர்கள். அன்னை சிவதியின் கருணைப் பொழிவில் அவர்கள் வாழ்வும், வளமும் மலரட்டும் !

100 வரிகளிலே என் ஆத்மாவை நிழற்பதிவு செய்தது சிவதி புராணம். அதனை, மானுடத்தை நேசிக்கும் தமிழக மக்கள்முன் வைக்கிறது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். வாழவேண்டும் கழகம் வளர வேண்டும் !

அகம் பூரித்து ஆசியுரைத்த திருப்பனந்தாள் ஆதீன முதல்வர், வாழ்த்துரை வழங்கிய அருள்திரு. கிருபானந்த வாரியார், ஆங்கிலத்தில் நயப்புரை கண்ட டாக்டர். தேவ சேனாதிபதி அவர்கள், அணிந்துரை எழுதிய மறைமலையடிகள் நூலகர் திரு. முத்துக்குமாரசுவாமி அவர்கள், நீண்டதோர் திறனாய்வு செய்த டாக்டர் கே. லோகநாதன் அவர்கள்— இவர்களை—இந்த அநுபூதிச் செல்வர்களை எப்படி நான் மறக்க முடியும்? எழுமையும் தொடரும் என் நன்றி.

சிறு நூலாயினும் சிறப்புற அமைய உழைத்துக்கொண்ட அப்பர் அச்சகத் தோழர்களுக்கும் மனங்கனிந்த என் நன்றி யுரியது.

வணக்கம்

''வாணி''
கரவெட்டி, இலங்கை.
28—3—'85

க. வீரகத்தி

## பாயிரம்

சர்வ பிரபஞ்சமும் அபிராமி பூத்து விகசிக்கும் தோற்றங்கள் பராசக்தியின் சம்பூர்ண பரிணமம்! எனக் கண்டு தரிசனம் செய்தார்கள் நம்முந்தையோர்களில் முதிர்ச்சி பெற்ற சிலர். அம் மாபெரும் சக்தியை யானும் மண்டியிட்டு வணங்குகிறேன்.

அழகாய், அழியாத நித்தியப் பேரழகாய்—உண்மையாய், முரண்பாடற்ற சாசுவதமான உண்மையாய்—நன்மையாய், அணுத்தனையும் தீமைக்கலப்பற்ற பெருநன்மையாய், சர்வத்திலும் வியாபகமாகித் தனியரசு செய்கின்றருள அபிராமி. அப்பேரரசியின் கருணைக்கு யானும் [1]ஏக்கற்று ஏம்பலிக்கிறேன்.

இயற்கையின் செளந்தர்ய நர்த்தனங்களிலெல்லாம் எழில் வீச்சுகளிலெல்லாம் அன்னை சிவதியைத் துல்லியமாகவும் தூலமாகவும் கண்டு தரிசனம் செய்கிறேன்! ஆனந்திக்கிறேன்! பரவசிக்கிறேன்! பாடவும் பாடுகிறேன. இச செளந்தர்ய தேவதையின் தயவுக்காக என்றும் தலைவணங்கி நிலைதளம்பாமல் நிற்கிறேன்.

சிவதியைச சிந்திப்பதும் [2]சேர்வதும், வந்திபபதும் வாழ்த்துவதும் எனக்கு உவப்பானதாகவும் இனிப்பானதாகவும் உள்ளது. என் சுயத்துவம் தனது மூலத்தானத்தில் மூலமூர்த்தியாகச் சிவ-

---

1. ஏக்கற்று - ஆசையால் தாழ்ந்து.

2. சேர்வது - இடைவிடாது நினைப்பது.

தியை எப்போதோ பிரதிட்டை செய்துவிட்டது. இம் மூலதேவதையை, காநதர்வ தமிழாலே அன்றுபோல் இன்றும்அர்சசித்து வருகிறேன்.

என் ஆத்மா சிறியவும் பெரியவும் ஆன பல ஆத்துமாக்களை உள்ளடக்கிகொண்ட ஒரு முழுமை, சிலவேளை தீராத துயரததில் தீயும ஓர் ஆததுமா. துன்ப அடித்தளததிற்கு கொறுகொறென இழுத்துச செல்லும் துராததுமாவும் ஒரெல்லையில் எனககு உதவியும் விடுகிறது. அபிராமியில் ஆனந்திக்கும் நிம்மதிககும் ஆத்மாவைத் திடீரெனத் தட்டி எழுபபி விடும். அப்புறம் யான் ஒரு தனி உலகம்; யாரும் ஆககிரமித்தும் உட்பிரவேசிக்க முடியாத தனி உலகம்'

என்னுடன் பின்னிப் பிணைந்துவிட்ட ஏகசக்தி சிவை பராசக்தி, பார்பபதி, நாராயணி, நாமகள், வாணி, விநாயகி, முருகி, வள்ளி எனப் 'பலப்பல மோகனமான நாமங்களால் வழுத்தப்படுகிறாள். யானும் புத்தம் புதிய மற்றொரு மணிப்பெயர் ஒன்றாலும் அன்னை பராசகதியை வழுத்துகிறேன். சிவதி எனக்குச் சரியானதாகவும் பிடித்தமானதாகவும் உள்ளது. சிவனும் சிவதியும் ஒரே சக்தியின் இருவித தோற்றங்கள்!

வேதஙகளும் பாடியஙகளும் கோடிட்டுக் காட்டும் ஜீவன் முத்த நிலையில் நின்று நான் சிவதியைப் பாடவில்லை. அந்தநிலை எனக்குப் பரிசசயமற்றதுங்கூட. அதே வேளையில் எவ்விதத் தீட்டு அல்லது தீட்டுகளுடன் கூட்டுச சேர்ந்த ஈனத்தில் ஆதமா சஞ்சாரம் செய்துகொண்ட நிலையில் நின்றும் பாடவில்லை. ''மணி மனம்'' எனக்கு இல்லவே இல்லை. இல்லாதிருந்தாலும் ''மணிசசுவடு'' என்னை ஆகர்ஷிக்கின்றது—பாடுகிறேன்! 'நான் கலநது' பாடுகிறேன்.

'அசுத்த ஆவி'கள் தவிர மனிதவாசிகளான அனைவர்களும் சிவதிபுராணப் பிரவ(ா)கிப்பில் லயித்துவிடுவார்கள்! ''சூழ்வார் இதய சுகம்''.

வணக்கம்.

1—8—1976 க. வீ.

# சிவதி புராணம்

## என்னும்

# சக்தி புராணம்

## காப்பு

உன்னைப் பிரசவித்த உத்தமியைச் சாம்புநதப்
பொனனைப் புகழ்நீல வண்ணத்தாள்—தன்னைக்
கவிதைபபொற் காபபணிந்து கைகூப்பித் தாழ
அமுதக் கணபதிநீ காப்பு !

பிரபஞ்சம் எல்லாமே பினனமறப் பூத்த
அரவிந்த வாலை அமலை—பரவுஞ்சீர்
சக்தி புராணம் உயர்சக்தி பெறவீர
சக்தி விநாயகனே காப்பு !

உள்ளச சுருக்கெடுககும் உண்மை யொளியாகும்
தெள்ளத் தெளிநதமிழ்த் தேனருவி—அள்ளி
நவமா யபிஷேகித் தஞ்சலித்த தூய
சிவதி புராணம்எனச் செப்பு !

## நூல்

புவனங்க ளீன்ற புவனேஸ்வரீ ! தெய்வத்
தவனத்தை யூட்டும் தயாபரையே ! கௌரீ !
அண்டபகி ரண்டமெலாம் ஆட்டும் பரம்பொருளை
ஆடவைத்துத தில்லையிலே அன்புசெயும் ஆரணங்கே!

கண்கண்ட தெய்வம்எனக் கண்பனிக்கும் அன்பர்களின்
புண்கொண்ட வாழ்வு பொடியாக்கும் பொன்னரசீ !
பாவத்திற் கஞ்சாத பாதகரின் சிந்தையுமே
நேசித்துக் கொள்ளும் நிறைகருணைப் பூங்குழலீ !
மங்கள வாழ்வு மலர வைக்கும் மாமுகிலீ !
தங்க மனமளிக்கும் தண்ணிலவே ! பொற்சிலம்பீ !
சிட்டுப்போ லோடிவந்து செய்தி செவிமடுத்து
முட்டுப்பா டெல்லாம் முழுதகற்றும் மூதாட்டீ !
கௌரீ ! எனவொருகால் கலலும் பனிப்பக்
கருணை பொழிகின்ற கற்பகமே ! பொற்சிலையே !
அங்கயற் கண்ணீ ! அழகுதமிழ்க் கூடலிலே
சங்கம் வைத்தன்று தமிழ்செய்த மீனாட்சி !
கலைநுட்பம் வானுயருங் காஞ்சியிலே ஞானக்
கதிகாட்டி மோகனிக்கும் கண்ணளினக் காமாட்சி!
காசிக்குச் சென்றுகண் மூடுகின்ற யாருக்கும்
கூசாமல் முத்தி கொடுக்கும் விசாலாட்சி !
பிரபஞ்சம் எல்லாம் சமதர்ம ஆணைசெயும்
பெண்ணான பெண்ணே ! பெருங்கருணைப் பேராறே !
பேராத பசசைவண்ணப் பெண்மைப் பெருஞ்சுடரே !
கோழை களாய்வீரங் குன்றினராய்ப் பாவம்
ஏழைகளின் வாயிலே மண்போடும் எத்தர்களை
எற்றிப் பந்தாடும் எலும்பொடியச் சாடும்
கொற்றவையே ! காளீமா காளீ ! பராசக்தி !
எல்லோரும் இன்புற் றிருக்குநெறி வாராத
புல்லோர்கள் கண்டறியாப் புண்ணியப்பூங் கோகிலமே !
மோனமெனும் ஞான வரம்பிலுறை முத்தர்அக
வான விளிம்பிலே வட்டமிடும் சிசசிலியே !
மன்னுயிரை நேசிக்கும் மாண்பு நெறிகாட்டும்

மாற்றுயருங கல்விதரும் மாநோன் பனுட்டிக்கும்
ஏற்றமுறும் வெண்டா மரையிதய வாணீ !
தன்னுயிரை ஏழைகளுக் கர்ப்பணிக்கும் வீரத்
தியாகத்தை வல்லபத்தைத் தீரததை ஈயும்
தயாநிதியே சாமுண்டீ ! தற்பரையே ! துர்க்கையே !
மனனுயிரைப பேணும்பொன் மணணுதி யானவற்றை
ஏமம் உறுகவென எல்லோர்க்கும் ஈகவெனச
சேமம் பெருகவெனச செய்துவரும் செந்திருவே !
கோலம் பலவாய்க் குணம்பல வானுலும
மூலததில் ஒனருன முன்னைப் பழம்பொருளே !
நவராத திரியணங்கே! நற்சிந் தனைச்சிவதீ !
அபிராமி உன்றன் அழகு விழிகளிலே
ஆவிகரை வாரை அவையிருததும் அம்பிகையே !
கிடைத்தற் கரிய மனிதப் பெரும்பிறவி
எடுதத பயனுக இன்பப் பணிபுரிநது
அப்பாலே நினனை அனுபவிககும் ஆர்வத்தால்
தப்பாத ஆன்ம விடுதலையாம் அத்துவித
ஆராத இன்பம் அருளுகினற ஆரமிழ்தே !
பேராத வாழ்வளிககும் பேசும்பொற் சிததிரமே !
அநதிப பொழுதில் அகல்வானக கோடியெலாம்
சிநதை மயக்கேற்றும் சிந்தூரததி னுல்மெழுகி
எணணற்ற கற்பனைகள் எல்லையிலாச சிததிரஙகள்
கணணைப பறிககும் கலைக்கோலம எல்லாமே
எழுதி யெழுதி யெழில்சேர்ந்த பேரழகாய்
இதய வெளியோ டிணைநதசையும் வான்வெளியில்
செந்தீக் குழம்பிற் சேருடித் தளதளக்கும்
அந்திக் கதிரோன் அழகொழுகும மேனியிலே
தெண்ணிலாக் கீற்றினிலே தேனருவி யூற்றினிலே

மண்ணிலா னந்த மதுவெறிக்கும் பாக்களிலே
எண்ணற்ற பூக்களிலே ஏகாந்த மூலையிலே
விண்மீன் சிமிட்டலிலே மின்னற் பளிச்சினிலே
உன்னைக்கண் டென்ஜீவ ஊற்றுத் திறக்குதம்மா !
எங்கெல்லாம் பேரழகின் நர்த்தனங்கள் அங்கெல்லாம்
எங்கெல்லாம் பேராற்றல் வீச்சுக்கள் அங்கெல்லாம்
நீயேயென் றானந்த பாஷ்பம் சொரிந்திடுவேன் !
அடுத்த கணப்பொழுதில் ஆனந்தம் எங்கோ... ?
கடுத்த முகத்தோடு காலேவா நடைசோரும்
திக்கற்ற ஏழைகளின் தென்பற்ற கண்ணீரில்
தீராத வேதனையாந் தீயுமிழும் நெட்டுயிர்ப்பில்
அன்னை யுனைக் காணாதென் னாவி யுறைந்திடுமே !
புவனமெலாம் பூத்து விகசிக்கும் சக்தியெனும்
தவமுடையார் வாசகங்கள் தப்புவதோ ? நற்சிவத்
பாரப் பழுவான வாழ்க்கையினர்க் குன்னருளை
வாரி வழங்கிடிலுன் வான்கருணை வற்றிடுமோ ?
அபிராமி போற்றி ! அரனவளே போற்றி !
நவசிந் தனைப்புலமை நல்கிடுவாய் போற்றி !
அரியா சனத்தில் அரசரோ டென்னைச
சரியா சனம்வைக்கும் சாம்பவீ போற்றி !
காரண காரியத்தின் கட்டறுத்து மேலான
பூரண மெய்ஞ்ஞான போதம் புகட்டுகின்ற
நாரா யணீபோற்றி ! நாமகளே போற்றி !
இதயக் கமலத்துள் இன்ப நடம்புரியும்
இமயச் சிவமகளே எந்தாயே போற்றி !
வையத்தில் வாழ்வாங்கு வாழுதற்கு மானுடனை
ஐயப்பா டின்றியாட் கொண்டருளும் வண்ணம்
தெள்ளி யெடுத்திட்ட தெய்வீக மெய்ஞ்ஞான

வெள்ளிப் பனிமலையின் வேதாந்தத் துச்சியிலே
ஆதார மாக அனைத்துக்கும் சக்திதரும்
கேதார கௌரீ! உன் பாதார விந்தங்கள்
வாழ்க! நிதம் வாழ்க! வளரொளியாய் வாழ்க!
வாழ்க பலவாண்டு! வாழ்க பலவூழி!
அழகுத் திருக்கோலம் அன்பு அருட்சீலம்
பழகும் அருட்பார்வை 'பால்' பொசியும் மேற்போர்வை
வேண்டுவோர் வேண்டுவன ஈயும் பெருங்கருணை
தூண்டுவார் உள்ளத்தே தோன்றும் ஒளிப்பிழம்பு
வாழ்க எனவாழ்த்தும் வல்லாளர் எல்லோரும்
ஆழ்வர் அருட்சிவதி ஆனந்த வெள்ளத்தே
சூழ்வர் இதய சுகம்!

# சிவதி புராணம்—
# ஒரு திறனாய்வு

பெருங்கவிதைகள் அனைத்துமே நாம் வணங்கும் ஐம்பெரும் பொருளை யாதாவது ஒருவகையில் மனதை ஆட்கொண்டு அவனது அறிவாய் நிற்க அதன்வழி சொற்களாய்ச் சொன்மாலைகளாய் உணர்வின் புது அலைகள் புறமாகின்றவையே. எல்லாவற்றையும் தனது பஞ்சகிருத்தியங்களால் நடத்திச்செல்லும் அப்பெரும் பொருள் அக் கவிஞனது உள்ளத்திலே அம்மையாய், அப்பனாய், அம்மையப்பனாய், குமரனாய், விமலனாய், மாலாய், மணிவண்ணனாய் இன்னும் எழில் சிநதும் அனைத்து இறைவடிவுகளாய் அமர்ந்து நின்று ஆடசிசெய்து புததழகோடு புதுமையோடு அளவிட முடியாத ஓர் ஆழத்தோடு தனது திறததினைக் கவிதை எனும் உருவிலே காட்டிக்கொள்கிறது பிறரையும் காணவைககிறது. தனக்கே புலனாகாத ஓர் புததுணர்வோடு புதியபொலிவோடு, நுண்ணுணர்வோடு அக் கவிஞன் தனது அறிவு செயல்படுவதைக் காண்கின்றான; தான் ஒரு கருவியாக ஒரு வாயிலாக ஆகுவதையும் அறிகிறான். அதனால் அவன அச்சம் அடைவதில்லை. அவலமனத்தானாய் ஆகுவதும் இல்லை தனது அறிவுடன செயல்படாதொழிவதில்லை. தான் தானாய் நினறிருக்கும. தனனுள் அப்பூரணன் புகுந்து தனது அறிவினை விசாலமாககி, சிநதையினைத் தூய்மையாக்கி அறிவாற்றலை மிருக்கும் அந்தப பேரருளின திருவிளையாட்டினைக் கண்டு பேரினப மடைகிறான. பிறப்பின் பயனையும் அடைநததாகக் கருதுகிறான்.

பண்டித வீரகவி அவர்கள் இந்த இன்பப் பேறினைப் பெற்றவர் என்பது அவர் படைததிருக்கும இநத சிவதி புராணத்தின வழி தெளிவாகிறது கரிமுகததோனை பிரசவிதத அன்னை, உததமி சம்புநதப் பொன், புகழ்நீல வண்ணத்தவளாகிய அசசததியாகிய சிவதி தன்னைக் கவிதைகளால் பொற்காபபணிவிததுப் போற்றுமாறு வேண்டத தன்னுள் நின்று தன்னை மீட்டும அவள வேண்டுகோளுக்கிணஙக இச சிவதி புராணததையே பாடியுள்ளார். பிரபஞ்சம் எல்லாமே பிரிவினறிப பின்னமறப் பூத்த அரவிந்த வாலை எனவும் உள்ளத்துச் சுருக்குகளை

எடுத்தொடுக்கும் உண்டை ஒளியாய், தெள்ளத் தெளிந்த செந்தமிழ் தேனருவியாய் நிற்கும் புனிதபபெரும் பொருள் என்றும் தன்னைக் காட்டிக்கொண்டு, தனது புராணத்தை ஓதுமாறு கவிஞனைத் தூண்டு கிருள். அவரும் பாடுகிருர். இச் சிவதிபபுராணததின் உட்கிடக்கை ஓர் உயிரினைப் புனிதச செம்பொருள அனுபவம்—இறையனுபவம் காலத்திலும் இடததிலும் நின்றியஙகி இச்சைவலத்தாறுய்த தான் பெற்ற உடலின் வழி பற்பல வினைகளையாற்றி அதன்வழி இச் சித்ததைப் பெற்றுச் சிற்றின்பம் துய்க்கும் ஒரு கட்டுயிரின் இறை யனுபவம். சிற்றின்பவேட்கையனுய் நிற்கும் கட்டுயிரின் உள்ளத்தில் புகுந்து பேரின்ப விளையாட்டினை நடத்தும் பரம்பொருளின அனுபவம். ஏது திருட்டாந்தங்களால் உண்டோ இல்லையோ என்று பகுத்தறிந்து ஆயும் அந்தச் சிந்தனைப் போககினைக் கெடுத்து, இருக்கின்றேன். ஏன் ஐயம் என்று அறிவினுட்புகுந்து ஆட்டுகின்ற ஆற்றல்சால் பெரும்பொருளின் அழகு அனுபவம். இதை எவ்வாறு ஆய்வது ?

அறிவினுடபடுபொருள் என்பதால் அதற்கு உருவுண்டு. ஆகவே தெரியவரும் இறைவடிவு எனன என்பதைத தேடலாம்.

வருகின்ற உருவோடு விளஙகுகின்ற பண்புகளும் உண்டு. புதியதாய் மலருகினற புனிதச செம்பொருளின் குணாதிசியஙகளைக் குறித்து நாம் திறன் காணலாம்.

ஆணவகனமமாயா மலஙகளால் கட்டுண்ட ஓர் ஆன்மாவின் கலன் இப் பேரருள் விளஙகுகினற பொழுது, புதியதோர் எழுசசியை அவ்வான்மா காண்கிறது. இறை பதிகினற பொழுது நிகழ்கின்ற இவ்வான்மா அனுபவமும் கவிதையில் இடம்பெற வாய்பபுண்டு. ஆகவே இவ்வான்மா அனுபவமும் ஆய்வதற்குரிய இன்னுமோர் உறுப்பாய் அமைநதுவிடுகிறது.

தெளிவாகினற இறைவடிவு, புதியதாய்க் காணவருகின்ற இறைகுணஙகள். இறைபொருளின் நேர் அனுபவத்தால் அமைய வரும் ஆனமாவின் எழுசசி என்ற நிலையின் இச சிவதி புராணததை இனி சற்று ஆய்வோம்.

தெளிவாகின்ற இறைவடிவுதான என்ன? தனக்கென்று ஓர் உருவமில்லா அவ்வருப சொருப செம்பொருள் அம்மையாக, தன்னைக்

கவிஞனின் உள்ளத்தில் வெளிப்படுகிறது. எத்தன்மைய அம்மை யாக? புவனேஸ்வரியாக, தயாபரையாக, கௌரீயாக, ஆரணங் காக, பொன்னரசியாக, பூங்குழலாக, மாமுகில்வண்ணத்தவளாக, பொற்சிலம்பியாக, சூதாட்டியாக, பொற்சிலையாக, அங்கயற் கண்ணியாக, மீனுட்சியாக, விசாலாட்சியாக, காமாட்சியாக, பெருஞ் சுடராக, கொற்றவையாக, கோகிலாமாக, சுருக்கமாகப் பெண்மை எனப்படும் உட்பொருளின் வடிவெல்லாம் தனதாகக் கொண்டு அச் செம்பொருள் கவிஞனின் உள்ளத்தில் ஓர் உணர்ச்சிப் பொருளா கிறது. ஓர் உணர்வுப் பொருளாகிறது. வடிவில்லா வொன்று அறிவினைத் தாக்காது; உணர்ச்சியை ஊட்டாது உணர்வினை விளக்காது. தனக்கென்று வடிவில்லா அச் செம்பொருளை, ஆற்றல் ஊற்றை அறிவுக்கண் கொண்டு காணுங்கால் யாதோ ஒரு வடிவுடன் தான் அதனைக் காண ஒல்லும். இதனுல் இவ் வடிவங்கள் அனைத்தும் பொய்யென்றும் ஆகாது. தாயாம் பண்பு எல்லா உயிர்வர்க்கங் களிடமும் புதைந்து கிடக்கிறது. சிறிது சிறிதாக வெளிப்படுகிறது. இல்லாது தோன்ருது. ஆகவே தோன்றுகின்ற பெண்மையும் உள்பொருளே.

கவிஞனின் உள்ளத்தின் அச்செம்பொருள் பெண்மையின் பல் வேறு உருவிலே ஏன் வர வேண்டும்? வெற்றெளிப் பிழம்பாகவே அறிவினுள் நின்று ஏன் உள்ளத்தின் சுருக்குகளை எடுத்தெரிக்கக் கூடாது?

கவிஞன் ஒரு மானிடயோனி. மலைந்த ஆன்மா. அவன் அனுப வத்தில் அகப்பட்ட பொருளின் வழியே தன்னை உணர்த்திஞல்தானே, அவன் அறிவில் அது விளங்கும்? இது பொருந்துவதேனும் எத் தனையோ அனுபவப் பொருட்கள் இருக்க ஏன் இந்தப் பெண்மையின் பல வடிவுகள்?

உள்ளத்தில் மலருகின்ற அச் செம்பொருளின் வடிவுதான் காட்டுகின்ற நித்தியப் பண்புகள் உணர்த்துகின்றமைக்கு ஒத்துவரு வடிவுகளாக அமைய வேண்டும். தன்னை உணர்த்துகின்றபொழுது தான் இத்தன்மைய பொருள் என்றே உணர்த்துகின்றமையால், அதற்குப் பொருந்தி வரும் ஆன்ம அனுபவ வடிவுகளாகவே அச் செம்பொருள் தோன்றுகிறது.

இத்தன்மைய பெண்மையின பல்வேறு வடிவுகளிலே உணர்த்தப் படும் நித்தியப பண்பு நலன்கள்தாம், குணாதிசயங்கள்தாம் எவை?

"புவனங்கள் ஈன்றதால் புவனேஸ்வரி;
தெய்வத்தவனத்தை ஊட்டுவதால் தயாபரை;
பரம்பொருளை ஆடவைத்துத் தில்லையிலே
அன்பு செய்யுமாறு தூண்டுவதால் ஆரணங்கு;
கண்கண்ட தெய்வம் எனக் கதறி அழு அன்பர்களின்
புண்கொண்ட வாழ்வினைப் பொடியாக்குவதால் பொன்னரசி;
பாவத்திற்கும் அஞ்சாத பாதகர்களின் உள்ளத்தையும்
நேசித்துத் தன்வயப்படுத்துவதால் அவள் நிறைகருணைப் [பூங்குழலி;
பற்பல முட்டுப்பாடுகளை ஓடிவந்து
உடன் அகற்றுவதால் அவளோர் மூதாட்டி;
கல்லும் பணிப்பக் கருணை பொழிகின்றதால் கற்பகம்;
பிரபஞ்சம் எல்லாம் சமதர்ம ஆணைசெய்து
அன்பு மிகுப்பதால் பெருங்கருணைப் பேராறு;
கோழைகளாய் ஆகிப் பண்டைய வீரமும் கெட்டுத்
தன்மானம் ஒரு சிறிதுமில்லாது ஏழைகளை மயக்கி
ஏய்க்கும் எத்தர்களைப் பந்தாடிச் சாடுவதால் கொற்றவை;
சுயநலமே மிகுந்து எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும்
என்ற எண்ணம் ஓர்சிறிதும் இல்லாதோர் உள்ளத்தில்
அமைதியைத் தரும் தண்ணுருவை ஒழித்து வைப்பதால் [கோகிலம்;"

இந்த இருப்பிற்கு இந்த அவத்தைபேதததிற்குக் காரணமாக ஒரே செம்பொருளே அமைகிறது என்றும் நாம் கொள்ளலாம்.

பொய்யகற்றி மெய்காண எல்லார் உயிர்களையும் அவர்களது பக்குவத்திற்கேற்ப இச்சாஞானங் கிரியாதிகளைக் கொடுத்து வழி நடத்திச் செல்வது பரம்பொருளின செய்தி என்பது சைவம் கண்ட பழையவுண்மை. இந்தப் பழையவுண்மை புத்தொளி பெற்றுப் புதியதோர் தெளிவுடன் இங்கு பிரகாசிககின்றது.

அப் பரம்பொருள் கருணைத்தாய், தயாபரை, கய்வரையும் நேசித்துக் கவரும் கன்னி, தங்க மனம் அளிக்கும் தண்ணிலவு,

உண்மை பழைய உண்மை. ஆனால் இந்தப் பழைய கருணை வடிவே பிரபஞ்சம் எல்லாம் சமதர்ம ஆணை செய்யும் கருணைப் பேருகத் தனனுயிரை ஏழைகளுககு அர்ப்பணிக்கும வீரத தியாகத்தை வல்லபத்தைத் தீரத்தை ஈயும் தயாநிதியாக மன்னுயிரைப் பேணும் பொன் மண்ணாதி யாவற்றையும் ஏமம் உறுகவென எல்லாருக்கும் ஈயுமாறு நல்லறம நவினறும் செந்திருவாகப் புதிய புதிய வடிவுகளை எல்லாம் எடுக்கின்றது என்பதை இப் புராணததின் வாயிலாக அறிகிறோம்.

ஏன் இந்தப் பழையவடிவின் புதுமைப் பொலிவுகள்? தெய்வத் திருவருளின் ஓரியல்பினை நாம் இங்கு நினைவு கூர்தல் வேண்டும். தாழ்ந்து கீழே செல்லுமபோது நாம் உயர்ந்து ஒழுகுவதற்கு ஊக்கம் காட்டும். உயர்ந்து செல்லும்பொழுது இனனும் உயருகவென உதவிக்கரம் நீட்டும். சமதர்ம ஆணைத்தாயாக ஏன இன்று அவள் தோன்றுகிறாள்? வீரத் தியாகததைச செய்யத தூண்டுவோளாக ஏன் அவள் இன்று? இருக்கின்ற செல்வததை வாரி வழங்குஙகள் என்று அறிவினுள் ஆளும் புதிய கருணைப்பொலிவு ஏன்? இன்றைய தமிழர்களை நினைததால் இந்தப் புதிய வடிவுகள ஒரு சில தமிழ் நெஞ்சஙகளில் தோனறுவதன் காரணம் எளிதில் கிடைக்கும்.

விருந்தினர் இல்லையே என்று வருந்திய நிலைபோய் இரப் போர்க்கு இல்லையெனறு சொல்வதற்கும் நாணிக் காதலியைவிட்டு நீங்கிக் காடுகள பல கடந்து மொழி பெயர் தேயமெல்லாம் சென்று பொருள் சேர்த்த அந்தத் திடமான மனம் போய் இரப்பதே, இரந்து பிழைப்பதே தொழிலாக கொண்டுள்ள இனறைய தமிழர்களின் அவலவுள்ளததை நினைததால்,

ஒரு பெண்ணை வீட்டிலே அடைத்து வைத்தால் அவளது அறிவு வளர்சசி தடைபடும் எனறு எண்ணித் தனமுயற்சியைத் தன்னம்பிககையைப் பாலுடன் இளம்பால கல்வியுடன் புகட்டிய அச் செம்மாந்த நிலைபோய், உளளததின அடிததளத்திலேயும் ஒருவனைக் கொழததடிமையாக ஆக்கும், தன்முயற்சியை முளையிலேயே கிள்ளி யெறியும் புன்மைச் சமுதாயமாகத தமிழ்ச் சமுதாயம் இருக்கின்ற நிலையைக் கண்டால்,

ஒரு புலி தங்குகின்ற கல்லளைபோல் என் வயிறு என் மகனைக் காணவேண்டுமெனில் ஒருவேளை போர்க்களத்தில் கூடும் என்று வீரம் பேசிய மானத்தாய்கள் எங்கோ பட்டு, கோழைத்தனத்தோடு வளரும் கும்பிடுவாதிகளாகக் குழந்தைகளை வளர்க்கும் ஈனத்தாய்கள் மலிந்து கிடக்கும் இன்றைய தமிழ்ச் சமுதாயத்தை நினைத்தால்,

நெஞ்சிலே உறுதி இல்லாமையால் அறம் எது, மறம் எது என்று சிந்தித்துச் செயல்படுவதையே மறந்து, சாதிகள், அரசியற் கட்சிகள், சமயக்குழாங்கள் என்ற போர்வைகளில் ஒளிந்துகொண்டு கண்களை உருட்டுகின்ற பேதமை நிறைந்த தமிழ்ச் சமுதாயத்தைக் கண்டால்,

அந்தக் கருணைத்தாய் இத்தகைய புதுவடிவங்களை எடுப்பதன் காரணம் தெற்றென விளங்கும். இவ்வாறு புதுமைப்பூச்சுடன் பூத்த இறை வடிவங்கள், கவிஞனின் உள்ளத்தின் எத்தகைய ஆன்ம அனுபவங்களாக விளைந்தன? இறைவடிவு தன்னை ஆட்கொண்டும் தான் தானகவே நின்று அந்த இறைவடிவினை அனுபவித்த கவிஞ னின் உளப்போக்குதான் என்ன?

அன்னை அனுபவிக்கும் ஆர்வத்தால், தப்பாத ஆன்மை விடுதலையாம் அத்துவித இன்பமாக என்றும் ஆராத பேரின்பமாக அந்த அனுபவமும் கவிஞனுக்கு அமைந்துவிடுகிறது. இங்கு அத்துவித இன்பம் என்பது ஒருமையின்பம்—இறைவனுடன் பிரிவற ஒருங்கியைந்து ஒன்றாக நிற்கும் நிலைமை ஆன்மா என்னும் தனிப் பொருள் அழிந்து பரப்பிரமமாக நிற்கும் நிலைமையல்ல—மாயாவாத வேதாந்த அத்துவிதம் அல்ல இங்கு பேசப்படுவது. அந்த ஒருமை நிலை யிலும் தான் அழியாது இறைவனை ஒரு வகையில் அனுபவித்து நிற் கும் சித்தாந்த முத்தி நிலையே இங்கு நவிலப்படும் அத்துவிதம்.

இந்த அத்துவிதக் கருத்துகளை இரண்டு வகையாகப் பிரிக்க லாம் ஒன்று பொருளத்துவிதம். ஒரே பொருளிலிருந்தே சித்து அசிதது ஈஸ்வரன் போன்றே அனைத்துப் பொருட்களும் பின்னமாகித் தோன்றியவை; இந்தப் பின்னநிலை கடந்து ஆன்மாவும் அம் மூலப் பொருளும் உண்மையில் ஒன்றே என அறிதலே முத்தி என்பது ஒருவகைய பொருளத்துவிதம். திருமாலிய சமயத்தின் மையக்

கருத்தாக இது விளங்குகிறது எனக் கொள்ளலாம். இன்னொரு வகையது, ஒரு வெள்ளைக் காகிதம் எவ்வாறு அதன்மேல் விழும் வர்ணங்களுக்கொப்பப் பற்பல வண்ணமுடைத்து என்று (பிழையாக) உணரப்படுகிறதோ அவ்வாறே பரப்பிரமமாகிய ஒரே பொருள், ஒருவித மாயா சக்தியால், அது விது என்றும் அத்தனமையது இத்தனமையது என்றும் பலவகையில் விகற்பித்து அறியப்படுகிறது. இநத மாயாசக்தியின்வழி அறிதலை நீக்கி நின்றால் இந்த வேறுபாடுகள் எல்லாம் பொய்யென்றாகி உண்மையில் பரபபிரமம் ஒன்றே உண்மைப் பொருள் என்று அறியவரும். இவ்வாறு அறிவு நிற்கும் நிலையே அத்துவிதம்; அதுவே பரமமுத்தி எனறு கூறுவது பிறிதொரு வகைய் பொருளததுவிதம். இதுவே மாயாவாத அத்துவிதம்.

இத்தகைய பொருளத்துவிதங்களுக்கு வேறதாக இருப்பது அறிவத்துவிதம். இஙகு இரண்டு உயிர்கள் காதலால் கட்டுண்டு மனம் முற்றிலும் ஒத்து வாழும் தம்பதிகளைப் போன்று ஈருயிர்கள் ஒன்றித்து ஒருமையுடன நிற்றல். அவனது எண்ணமே அவள் எண்ணம்; அவன் சிந்தையே அவள் சிந்தை; அவன் செயலே அவள் செயல் என்றவாறு அவள் அவனுடன் ஒன்றாகி ஒருங்கியந்து நிற்றல். தாசமார்க்கம், சகமார்க்கம், புதரமார்ககம் என்பவையெல்லாம் இம் முடிநிலைககு முற்பட்ட நிலையிலிருந்து கொண்டு, அம் முடிநிலைக்குச் செல்லுகின்ற பொழுது பின்பற்றிவரும் பாதை கணிப்புகள்.

இந்த அறிவத்துவிதத்தில் உண்மையரான பொருள்கள் திடீரெனப் பொய்யாகாது. உண்மையானது யாண்டும் உண்மையானதாகவே நிற்கும் மேலும் முததிநிலையில் ஒன்றழிந்து பிறிதொன்றாகி இல்லாது போகும் என்ற கருத்திற்கும் இடமில்லை. ஆன்மாவும் உண்டு, பரம்பொருளும் உண்டு ஆன்மா தன கட்டுகளை நீக்கி, தான் தனது எனும அறிவு இனறி இறைவனுடன் ஒருமையுடன் நிற்கும். ஆகவே இறைபபொருளை அனுபவிக்கும் அவ்வனுபவமும் ஆஙகுண்டு. அவ்வாறு அனுபவிததுக்கொண்டிருக்கும் பொழுது இறைவனாகவே நிற்கும் எனபதால் அதன மொழி மௌன மொழியாகவே யிருக்கும். ஆனால் அந்நிலையிலிருந்து நீஙகி அவ்வனுபவததை நினைவு கூர்கையில் அது பேரின்ப தூயநிலையாக மொழியாககப்படுகிறது.

கவிஞர் வீரகவி அவர்கள் வர்ணிக்கும் அத்துவிதப் பேரின்பம், அறிவத்துவிதப் பேரின்பம். தான் அழியாது நின்று அடைந்த இறையொருமை அனுபவம்.

ஆனால் இந்த ஒருமைப்பேரின்பம் ஏன் தப்பாத ஆன்ம விடுதலையாக உணரப்படுகிறது? இந்த ஒருமையின்பம் அடையாத முன் இந்த ஆன்ம விடுதலையுணர்வு இல்லை: இந்த ஒருமையுடன் நிற்காத நிலையிலும் இவ்வுணர்வு இல்லை ஆக இறைவனுடன் முற்றிலும் ஒடுங்காமுன், ஆமை விடுதலையடையாத சிறைப்பட்ட ஆன்மாகவே உயிர் நின்றிலங்குகிறது என நாம் முடிககவேண்டும். இந்த விடுதலையுணர்வு இறையனுபவத்தில் தோன்றியும் பிரிந்து நிற்கும் பொழுது இல்லாதும் நிற்கிறது.

முடிவான பேரின்பமயமான அறிவத்துவிதத்தில் அந்தப் பேரின்ப உணர்விற்கு நேரான காரணமாக இநதக் கட்டுநீக்கம் ஆன்மா விடுதலை அமைகிறது என்றும் நாம் கருதலாம். இறைபொருளை நேராகக் கணட அந்த அனுபவம் ஒருவனைப பாதிக்காது, அவனது அறிவினை யாதாவதொரு வகையில் திருத்தியமைக்காது. மாற்றுது விடாது. செவ்வெரியில் விழுந்த பொனனும் புத்தொளி பெறுமா போல் அநத ஆன்மாவின் அறிவும புதுவிளக்கம் பெறுகிறது.

இந்தப் புதுவிளக்கம் பெற்ற அறிவின்வழி இந்த உலகினை மீண்டும் காணுகையில் காண்கினற உலகம் இருக்க, காணுகின்ற கோணததில் ஆழ்நத மாற்றம் உரிததாகிறது.

*''இந்த உலகம் அது விது என்னும் உயர்திணை அஃறிணைப்*
*பொருட்களாய் இருப்பது உண்மையே; இன்னும் தெரித்தி,*
*வீண்மீன்களென, வெண்திங்களென பன்னிற விண்வெளியென*
*தென்றெலென இருப்பதும் உண்மையே,*
*ஊற்றுகளென ஜீவநதிகளென ஆங்கே வளரும்.*
*செடிகொடிகளென மரங்களென ஆங்கேபூக்கும்*
*மலர்களென இருப்பதும் உண்மையே''.*

என்று இந்த உலகம் உண்மைப் பொருளாக மீண்டும் பிறிதொரு வகையில் உணரப்படுகிறது. விடுதலைக்கு முன் இந்த உலகம்

உண்மையா பொய்யா என்ற கேள்விக்கு இல்லாமலேயே ஆன்மா வாழ்ந்து நின்றது. இறையனுபவத்தால அப்பால் நிலைக்கும் சென்று திரும்பிய ஆன்மா மீண்டும் இந்த உலகம் பொய்யல்ல மெய்யே என்று உணருகிறது. இந்த உலகம் இருக்க வேண்டியதற்கு ஒரு கட்டாயம் இல்லை ஆனால் இருக்கிறது. இதை அந்தப் பரம்பொருள் அனுபவம் அமைந்த கவிஞன நன்ருகவே காண்கிருன்.

ஆனுல் இந்த உலகம் உண்மை என்பதை மட்டிலும் அல்ல, இன்னென்றையும் காண்கின்ருன. என்ன அது?

அந்தப் பேரழகான வான்வெளியில் அந்திக்கதிரோன் அழ கொழுகும் மேனியிலே எண்ணற்ற பூக்களிலே ஏகாந்த மூலையிலே விண்மீன சிமிட்டினிலே அந்த இறைபொருளையும் உடன கண்டு, அந்தக் காட்சியால் ஜீவ ஊற்று திறக்குதம்மா என்று தனது அறி வாற்றலின புது வேகத்தின் காரணததையும காண்கின்ருன்.

நிட்களமாகிய அதே பொருள் சகளமாகி நிற்பதையும் காண் கிருன். கண்டு தனது அறிவின் புதுத திறத்தின் காரணத்தையும் அறிகிருன். அறிந்து,

> ‘‘எங்கெல்லாம் பேரழகின் நர்த்தனங்கள் அங்கெல்லாம்
> எங்கெல்லாம் பேராற்றல் வீச்சுக்கள் அங்கெல்லாம்
> நீயேயென நானறிந்து புஷ்பம் சொரிந்திடுவேன்’’

என்கின்ருர்.

முதற்கூறியவை எல்லாம் அழகான எழிலான இன்பததிருக் காட்சிகள், உலகம் என்பது அத தனமைய காட்சிகளை மட்டிலும் உடைததது அல்ல. நடைசோரும் திக்கற்ற ஏழைகள். அவர் களின தென்பற்ற கண்ணீரில் தீராத வேதனைகளால் தீயுமிழும் நெட்டுயிர்ப்பும் ஆங்கு உண்டு; அதுவும் உண்மையே, பொய்யல்ல. இங்கு அந்த சிவதி என்னவாருள? இன்ப எழிலில் காட்சிகளில் காணவந்த அவ்வன்மை துன்பச சுமைவதி காட்சிகளில் எஙகே?

இத் தன்மைய கவிஞனின் கண்ணுக்கு அப் பரம்பொருள் தென்படவில்லை: அங்கு அஃது இல்லை என்ற கருத்தன்று—அத்

தன்மையைச் சுமைக்காட்சிகளில் இமையா தொழிகின்ருன். இந்த அவலக் காட்சிகள் இறைவியை நினைக்குமாறு தூண்டவில்லை: துன்பததில் கவிஞனை ஆழ்ததிப பேரின்பவுணர்வு இம்மியும் தோன்ருதவாறு அதனைப போக்குகிறது. இந்நிலையைத்தான் அனையுனைக் காணுது என் ஆவி உறைநதிடுமே என்று கூறுகினருன, வேதனை தாஙகாது ஒருவகையில் வெகுண்டும் கேட்டும் விடுகிருேம்: பாரபபழு வான வாழ்ககையினர்க்கு உன்ன ருளை வாரி வழஙகிடின் வான் கருணை வற்றிடுமோ எனறு.

இந்தக் கேள்வியும் ஒரு விளக்கததைத் தநதுவிடுகிறது. நிட்ளமாகிய அப்பொருள சகளமாகி எங்கும் பிரிவற நிற்கிறது. ஆனுல் அதன் அருட்கருணை யாண்டும் எபபொருளிடத்தும் ஒரே சீராக இருப்பதில்லை அருட்கருணை நனருய்ப பதிந்த விடங்கள் இன்ப எழில் காடசிகளுககு இலக்கு, அருட்கருணை குனறிய நிலையில் விளஙகுபவை அவலக்காடசிகள், அழுககுக்காட்சிகள், துனபக் காட்சிகள், வேதனைக்காட்சிகள் என்பன போனறவற்றிற்கு இலககு. இத் துனபமயமான இலககுகளையும் இந்த உலகத்தில் ஏன் உண்மைப் பொருளாய் வைததிருக்கின்ருய் எனறு அதன காரணததைப் புரியாது ஒரு விந்தையுணர்வுடன் ஒரு கேள்வியை எழுப்புகின்ருர்.

இனி, கேள்விகளும் உண்மையில் கேளவியாக அமைந்துவிடுவதில்லை, விஞககளும செப்பாக ஆகும் இடமுண்டு என்று தொல்காபபியர் அன்றே கூறியிருக்கிருர்: ஆனுல் இங்கு இநதக் கேள்வி உண்மையில் ஒரு வேண்டுகோளாக—விண்ணப்பமாக அமைந்து விடுகிறது. அபிராமி போற்றி அரனவளே போற்றி இதயமாகிய கமலத்துள் இன்ப நடம் புரியும் இமயச சிவமகளே எந்தாயே போற்றி என்றெல்லாம் அப் பரமபொருளைப் போற்றி விடடு கேதார கௌரீ! உன் பாதார விந்தஙகள் வாழ்க. வளரொளியாய் வாழ்க வென்று மானுடஞகிய கவிஞர் அப் பரம்பொருளின் உள்ளத்தைக் குளிரவைக்குமாறு போல் மொழியாற்றி.

"அழகுத் திருக்கோலம் அன்பு அருட்சீலம்
பழகும் அருட்பார்வை பால் பொசியும் மேற்பார்வை
வேண்டுவோர் வேண்டுவன ஈயும் பெருங்கருணை

தூண்டுவார் உள்ளத்தே தோன்றும் ஒளிப்பிழம்பு
வாழ்க என வாழ்த்தும் வல்லாளர் எல்லோரும்
ஆழ்வர் அருட்சிவதி ஆனந்த வெள்ளத்தே
சூழ்வர் இதய சுகம்.''

என்று தமது விண்ணப்பத்தை வெளியிடுகின்றார். எல்லாரும் அவள் அருட்பெருங்கருணையில் ஆழ்நது அதன்வழி இதய சுருக்கு களைக் கெடுதது இதய சுகம் அடைந்து இன்பவுணர்வுகள் தோன்றி விடும் எழிலார்ந்த இலக்குகளாக ஆகவேண்டும் என்று உள்ளார்ந்த ஆசையை வெளியிடுகின்றார்.

இச சிவதி புராணம், இவ்வாறு நாம் நுணுகி நுழைந்து காணும் பொழுது மெதுவாக மலர்ந்து வரும் புதிய சமய சிந்தனைகளை ஓரளவு கோடிட்டுக காண்பிககிறது காலததிற்கேற்ற வகையில் பன்னூறு ஆண்டுகளாகச சைவ இலக்கியஙகள் தோனறியுளளன. அந்த வகையில் புதியதோர் ஆழததுடன உணர்வுடன இருபதாம் நூற்றுண்டு சைவ சமய இலககியஙகளில் ஒன்றுக இஃது அமைந் துள்ளது என்று அடியேன கருதுகின்றேன.

நேரிய இறையனுபவம கண்ட பண்டித வீரகவி அவர்கடகு என உளமார்நத வாழ்ததுகளைக் கூறுவதைவிட வேறென்ன முடியும் ?

வாழக அவர் திருததொண்டு !

—டாக்டர். கே. லோகநாதன்
செயின்ஸ் பல்கலைக்கழகம்,
பினுங்கு, மலேசியா.



## சிவதிபுராணம்........

"அன்னையின் அருள்நலம் வேட்கும் ஓர் ஆன்மாவின் குரல்."

—ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள், திருப்பனந்தாள்.

"திரட்டுப்பால்போல் அளவில் சிறியதாய், மகிமையில் பெரியதாய் விளங்குகின்றது."

—திருமுருக கிருபானந்த வாரியார், சென்னை.

"May Pandithar Veeragathy's offering to the Divine Mother evoke Her Grace to bless the world with Peace and Prosperity and Spiritual."

—Dr. V. A. Devasenapathy, Madras.

"இந்த இருபதாம் நூற்றாண்டில் வெளிவந்த சமய இலக்கியப் படைப்புகளில் இது மிகச் சிறந்ததென அறிஞர்கள் போற்றுவது திண்ணம்."

—இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.,
நூலகர், மறைமலையடிகள் நூலகம், சென்னை.

"காலத்திற்கேற்ற வகையில் பன்னூறு ஆண்டுகளாகச் சைவ இலக்கியங்கள் தோன்றியுள்ளன. அந்த வகையில் புதியதோர் ஆற்றலுடன் உணர்வுடன் இருபதாம் நூற்றாண்டு சைவசமய இலக்கியங்களில் ஒன்றாக இஃது அமைந்துள்ளது என்று அடியேன் கருதுகின்றேன்."

—டாக்டர் கே. லோகநாதன்,
செயின்ஸ் பல்கலைக் கழகம், பினாங்கு, மலேசியா.

விலை ரூ. 2-25

அப்பர் அச்சகம், சென்னை-600 108.